12th September 1958]

SRI K. B. S. MANI : இந்த நாட்டு மருத்துவத்தில் இரண்டு முறை இருக்கிறது. பச்சிலை முறை ஒன்று, கந்தகம் போன்ற உலோக வஸ்துக்களை உபயோகப்படுத்தும் முறை ஒன்று. வட இந்தியர்களைவிட, தென் இந்தியர்கள் இந்த முறையில் உயர்ந்த தேர்ச்சி பெற்றிருப்பதால், மருத்துவ ஆராய்ச்சி நிலையங்களில் இவர்களை முக்கியஸ்தர்களாக வைத்து, பிரதான தலைவர்களாக வைத்து இந்த ஆராய்ச்சியை நடத்துவதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இம்மாதிரியான ஒரு ஆராய்ச்சி இப்பொழுது செங்கோட்டை தாலுகா பக்கத்தில் ஒரு கிராமத்தில் தேவஸ்தான பண உதவியோடு ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இதிலே நாம் கொஞ்சம் ஊன்றி ஆராய்ச்சி செய்த பிற்பாடு, எந்த வகையிலே உள்நாட்டு வைத்தியத்தை இன்னும் அதிகமாக விஸ்தரிப்பது என்பது பற்றி யோசிக்கலாம்.

SRI N. MARUDACHALAM : அரசாங்கத்தினால் அனுமதிக்கப்பட்ட நாட்டு வைத்திய ஆஸ்பத்திரிகள் எத்தனை இருக்கின்றன ? அவைகள் எந்தெந்த இடத்தில் இருக்கின்றன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதற்கு முன் அறிவிப்பு கொடுத்தால், பதில் சொல்லுவேன்.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : இம்மாதிரி ஆராய்ச்சிக்கூடங்கள் ஏற்படுத்த சர்க்கார் முடிவு செய்து முன் வந்தால், சித்த வைத்தியத்திலே அதிகமாக பிரசித்தி பெற்ற பழனியில் இந்த ஆராய்ச்சி கூடத்தை நிறுவ முன்வருவார்களா ?

MR. SPEAKER : ஒவ்வொரு அங்கத்தினரும் தங்கள் ஊரில் இந்த ஆராய்ச்சி நிலையம் ஏற்படுத்தப்படுமா என்று கேட்டால், மந்திரி அவர்கள் எப்படி பதில் சொல்ல முடியும் ?

*Industries at Neyveli*

* 195 *Q.*—SRI V. K. KRISHNAMURTHI (on behalf of Sri S. Lazar) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the main and allied industries to be started at Neyveli;

(*b*) whether any electrical wares manufacturing plant is also to be installed at Neyveli; and

(*c*) if so, details as to the cost, its productive capacity and the date of commencement of the work?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The integrated lignite per year, the setting up of a large thermal power station of lignite per year, the setting up of a large thermal power station of 250 M.W. using lignite as fuel for steam generation, a fertilizer unit for the manufacture of nitrogenous fertiliser with a nitrogen content of 70,000 tons per annum in the shape of urea only, and a briquetting plant for the manufacture of about 380,000 tons of carbonised lignite briquettes. A scheme for washing the china clay available close to the lignite is also being prepared.

These are the main industries at present and are the responsibility of the Government Company, namely, the Neyveli Lignite Corporation (Private), Limited.

(*b*) Seshasayee Industries, Limited, Tiruchirappalli, have been granted a licence under the Industries (Development and Regulation) Act, 1951, to set up a factory for the manufacture of porcelain H.T. and L.T. insulators.

[12th September 1958

(c) *Details of cost of the scheme.*—Particulars are not available as to the exact amount of capital proposed to be invested by the Neyveli Lignite Corporation (Private), Limited in the main undertaking or by Seshasayees in their industry.

*Productive capacity of the electrical ware industry* :—

H.T. Insulators—720 tons per annum.

L.T. Insulators—420 tons per annum.

*Date of expected commencement of the works*—About 31st March 1959.

SRI A. GOVINDASAMY : இந்த உர உற்பத்தி தொழிற்சாலை, தர்மல் ஸ்டேஷன் இவைகளை ஏன் தனியார் துறைக்கு விட்டு லைஸென்ஸ் கொடுத்திருக்கிறார்கள். ஏன் அரசாங்கமே எடுத்து நடத்தக்கூடாது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதில் ஒரு சிறு கன்பியூஷன், இந்த ஹை டென்ஷன் லோ டென்ஷன் இன்ஸுலேட்டர் செய்வது மட்டும் தனியாருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்றவை லிக்னைட் கார்ப்பொரேஷனே செய்கிறது.

SRI P. U. SHANMUGAM : இந்த கனிச் சாலையில் என்னென்ன பொருள்கள் தயாரிக்கப்படும் என்கிற ஜாபிதாவை அரசாங்கம் அங்கத்தினர்களுக்கு அளிக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தனிக் கேள்வி போட்டால், அதைத் தயாரித்துக் கொடுக்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : இப்பொழுது எடுக்கப்படும் பழுப்பு நிலக்கரியைக் கொண்டு சேலத்தில் இரும்பு தொழிற்சாலை ஆரம்பிக்கவேண்டும் என்றிப்பதால், அதற்குப் போதுமான பழுப்பு நிலக்கரி இங்கே மிஞ்சுமா, அல்லது பூராவுமே இங்கேயே செலவழிக்கப்பட்டு விடுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : நெய்வேலியில் இருக்கக்கூடிய பழுப்பு நிலக்கரி எவ்வளவு என்பது திட்டவட்டமான ஆராய்ச்சி செய்து முடியவில்லை. இப்பொழுது தெரிந்த அளவில் ஏராளமான பழுப்பு நிலக்கரி இருக்கிறது. அது எத்தனை தொழிற்சாலைகளுக்கு வேண்டுமானாலும் காணும்.

SRI V. SANKARAN : பிரிக்கட்ஸ் தயாரித்த பிறகு கிடைக்கும் by-products-களான் கோல்டார், wax முதலிய பொருள்களைக் கொண்டு வாசனைத் திரவியங்கள், பெயிண்டுகள் இவை தயாரிக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : நான் அடிக்கடி தொழில் சம்மந்தமாகப் பேசும்போதெல்லாம் வற்புறுத்தி வருகிறேன் : தனியார் யாராவது இம்மாதிரித் தொழில்களை எடுத்துச் செய்ய முன்வந்தால், சர்க்கார் அதற்கு வேண்டிய உதவிகளைச் செய்யும்.

SRI K. S. G. HAJA SHERIFF : Sir, may I know whether this Government have any commitment in the Neyveli Scheme and if so, the details ?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir. Originally the scheme was conceived by the Government of Madras and on the moneys they have invested, they are getting 4 per cent and on the profits the Madras Government is paid 25 per cent.

SRI M. KARUNANITHI : நெய்வேலியில் மார்ச்சு 31-ல் ஆரம்பிக்கப்படப் போவதாய்ச் சொன்னார்கள். தொழிற்சாலை நிறுவுவது மார்ச்சு 31-லா அல்லது, ப்ரொடக்ஷன் மார்ச்சு 31-லா ?

12th September 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : அது லிக்நைட்டைப்பற்றி இல்லே. ஹை டென்ஷன், லோ டென்ஷன் இன்ஸுலேட்டர் செய்யும் தொழிற்சாலே மார்ச்சு 31-ல் ஆரம்பிக்கும்.

SRI D. S. AUTHIMOOLAM : இரண்டாவது திட்டகாலத்தில், நெய்வேலிக்கு ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு? அது எந்த அளவில் செலவாகிறது ? முன்னேற்றகரமாக செலவாகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 66·90 கோடி. ஆனல் இப்பொழுது ஒதுக்கப்பட்டதைவிட அதிகமாகப் போய்விடும். ரூ. 75 கோடி வரை வேண்டியிருக்கும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. நல்ல முறையிலே படிப்படியாக முன்னேற்றம் ஏற்பட்டு நடந்து வருகிறது.

MR. SPEAKER : கனம் நிதி அமைச்சர் வந்து விட்டார். ஸ்ரீ தியாகராஜன் இப்பொழுது அவருடைய கேள்வியைக் கேட்கலாம்.

*Kallupatti Block Advisory Committee*

*176 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சென்ற ஒரு ஆண்டு காலமாக மதுரை ஜில்லா கலெக்டர் கல்லுப்பட்டி ப்ளாக் அட்வைசரி கமிட்டி கூட்டம் தேவையில்லேயெனக் கூறி நிறுத்தி வைத்தது சர்க்காருக்குத் தெரியுமா ?

(ஆ) அப்படியானல் இதற்கு காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) The Collector of Madurai issued no such directions.

SRI N. R. THIAGARAJAN : கலெக்டரிடம் பேசியதில், அடிக்கடி கூட்டம் கூட்டுவதால், அதிகக் குறைகள் கூறுகிருர்கள். ஆகையால் கூட்டம் கூட்டத் தேவையில்லே என்று வலியுறுத்திக் கூறுகிருர். சர்க்கார் கலெக்டர் அடியோடு கூட்டம் நடத்தத் தேவையில்லே என்று உத்தரவு போட்டிருக்கிருர்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்த மாதிரித் தகவல் இல்லே. இந்தக் கமிட்டிகள் எந்த அளவுக்குக் கூட வேண்டுமோ அந்த அளவுக்குக் கூட்ட ஏற்பாடு செய்யப்படும். ஏதோ ஹாஸ்யமான முறையில் அவர்கள் சொன்னதை ஸீரியஸாக அங்கத்தினர்கள் எடுத்துக்கொண்டு புகார் செய்கிருர்களோ என்று பயப்படுகிறேன். முன்பு சில அங்கத்தினர்களே நியமிப்பதில், அரசாங்கத்திலிருந்து உத்தரவு போடத் தாமதம் இருந்தது. இப்பொழுது புதிதாக உத்தரவு போட்டிருக்கிருேம். அதாவது சில அங்கத்தினர்கள் நியமிக்கப்படாவிட்டாலும் இந்தக் கமிட்டிக் கூட்டங்கள் நடக்க வேண்டும் என்று.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : அட்வைசரிக் கமிட்டிக் கூட்டம் கூட்டப்படாத காரணத்தால் திட்ட வேலேகள் குறிப்பிட்ட காலத்தில் முடியாமற் போகுமாதலால் காலத்தை அதிகரிக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படிச் செய்ய வேண்டிய அவசியமில்லே. திட்ட காலத்திற்குள், எல்லாக் காரியங்களேயும் செய்ய எல்லா விதமான நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன.

MR. SPEAKER : அடுத்து வரும் 185, 186 இரண்டு கேள்விகளேயும் சேர்த்து எடுத்துக் கொள்ளலாம்.

*Ministers' tour*

*185 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Hon. the Chief Minister and Hon. the Minister for Public Works undertook any tour of Devikulam and Peermedu taluks of Kerala State in May 1958 at State cost; and

(*b*) if so, the official business transacted during this tour?